# இஸ்லாமிய ஒழுக்கவியல்

மவ்லவி. S.H.M. இஸ்மாயில் ஸலபி

ஜமாஅத் அன்சாரிஸ் சுன்னதில் முஹம்மதிய்யா

بسم الله الرحمن الرحيم

வெளியீட்டெண் -17

# இஸ்லாமிய
# ஒழுக்கவியல்

ஆசிரியர்:
**எஸ்.எச்.எம். இஸ்மாயில் ஸலபி**
(ஆசிரியர்-உண்மை உதயம் மாத இதழ்)

வெளியீடு:
**ஜம்இய்யது அன்சாரிஸ் சுன்னதில் முஹம்மதிய்யா**
**பறகஹதெனிய,**
**வேஉட,**
**ஸ்ரீலங்கா.**

# புத்தக விபரத் தொகுப்பு

| | | |
|---|---|---|
| நூல் பெயர் | : | இஸ்லாமிய ஒழுக்கவியல் |
| ஆசிரியர் | : | எஸ்.எச்.எம். இஸ்மாயில் ஸலபி |
| மொழி | : | தமிழ் |
| பக்கங்கள் | : | 40 |
| பிரதிகள் | : | 2000 |
| நூலின் அளவு | : | 1/8 கிரவுன் |
| அச்சுக்கோர்வை | : | ஷிபா கிராஃபிக்ஸ், சென்னை-1.<br>செல்: 98403 61227 |
| அச்சிட்டோர் | : | மாஹின் பிரிண்டர்ஸ்<br>சென்னை - 1. போன்: 25225143 |
| வெளியீடு | : | ஜம்இய்யது அன்சாரிஸ் சுன்னதில் முஹம்மதிய்யா |
| கிடைக்குமிடம் | : | சாஜிதா புக் சென்டர்<br>248, தம்புச் செட்டித் தெரு,<br>முதல் மாடி, சென்னை - 600 001.<br>போன்: 044 - 25224821<br>செல்: 98409 77758 |
| விலை | : | ரூ. 12.00 |

# முன்னுரை

அளவில்லா அன்பும் நிகரில்லா அருளும் நிறைந்த அல்லாஹ்வின் திருநாமத்தால் ஆரம்பிக்கின்றேன்.

புகழ் அனைத்தும் அல்லாஹ் ஒருவனுக்கே! ஸலவாத்தும் ஸலாமும் இறுதித்தூதர் முஹம்மத்(ஸல்) அவர்கள் மீதும் அவர்காட்டிய வழியில் வாழ்ந்த, வாழும் அனைவர் மீதும் என்றென்றும் நின்று நிலவட்டுமாக!

அபிவிருத்தி, முன்னேற்றம் என்பது உண்மையில் பொருளாதாரத்தில் மட்டும் தங்கியிருப்பதில்லை. ஒழுக்க விழுமியம் மிக்கதொரு சமூகத்தைக் கட்டியெழுப்பும்போதே உண்மையான சமூக முன்னேற்றத்தைக் காணமுடியும். இவ்வகையில் ஒழுக்க வாழ்வு மிக முக்கியமானதாகும்.

எல்லா சமயங்களும் ஒழுக்கவியல் கோட்பாடுகளைப் போதித்திருப்பினும் இஸ்லாம் அதிலும் தனித்துவமான முத்திரையைப் பதித்துள்ளது. இச்சிறு நூலில் முடிந்தவரை சுருக்கமாகவும், தெளிவாகவும் ஒழுக்க வாழ்வுக்கான ஊட்டச்சத்து இறைமார்க்கமாம் இஸ்லாம் ஒன்றில் மட்டுமே நிறைவாகவும், பூரணமாகவும் உள்ளன என்பதை விபரித்துள்ளேன்.

புறம் இஸ்லாத்தில் ஹறாம், தற்பெருமை வேண்டாம், பொறாமை வேண்டாம் ஆகிய நூற்களுக்கு இதனை ஒரு முன்னுரையாகக்கூடக் கருதலாம். இன்ஷா அல்லாஹ் ஒழுக்கவியலுடன் தொடர்புபட்ட இன்னும் பல

அம்சங்களையும் சுருக்கமான நூற்களாகத் தொகுக்கும் எண்ணம் உண்டு.

வழமை போல் எனது இந்நூலை ஜம்இய்யா வெளியிடுகின்றது. அதன் அமீர் அஷ்ஷெய்க் N.P.M. அபூபக்கர் சித்தீக் (மதனி), செயலாளர் A.L.கலீலுர்ரஹ்மான்(M.A) மற்றும் அங்கத்தவர்கள் அனைவருக்கும் என் நன்றியைத் தெரிவிக்க நான் கடமைப்பட்டுள்ளேன்.

இந்தியாவில் எனது நூற்களை அச்சிட்டு விநியோகித்து வரும் ஸாஜிதா புத்தக நிலையத்தின் உரிமையாளர் முஹம்மது ஸகரிய்யா அவர்களுக்கும், எனது நூற்களை ஆர்வமுடன் வாங்கிப் படிக்கும் வாசகர்களாகிய உங்களுக்கும் என் நன்றிகள் உரித்தாகட்டும்.

எல்லாம் வல்ல அல்லாஹ் நம் அனைவரையும் ஒழுக்க வாழ்வில் உயர்ந்தவர்களாக ஆக்கி அருள்வானாக!

அன்புடன்,

எஸ்.எச்.எம். இஸ்மாயில்(ஸலபி)

59/B, கலதெனிய,
உடத்தலவின்னை மடிகே,
கடுகஸ்தொட்ட.

# பதிப்புரை

அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால் ஆரம்பிக்கின்றேன்.

எல்லாப் புகழும் அல்லாஹ் ஒருவனுக்கே! ஸலவாத்தும் ஸலாமும் முஹம்மத்(ஸல்) அவர்கள் **மீதும்** அவரது குடும்பத்தினர், உற்றார், உறவினர், தோழர்கள், தொடர்ந்தவர்கள் அனைவர் மீதும் என்றென்றும் உண்டாகட்டும்.

இன்றைய உலகு அறிவியலிலும், தொழில் நுட்பத்திலும் அபரிமிதமான வளர்ச்சியைக் கண்டிருந்தாலும் ஒழுக்க வாழ்வில் அதாள பாதாளத்திற்குச் சென்று கொண்டிருப்பதை அனைவரும் அறிவர். மனிதனது அறிவியல் கண்டுபிடிப்புக்கள் அனைத்தும் இன்று ஒழுக்க சீர்கேட்டை வளர்ப்பதற்கே வந்தவை போன்றாகிவிட்டன. T. V. தொடக்கம் இண்டநெற் வரை இதற்கு விதிவிலக்கிலல்ல எனலாம்.

இவ்வேளையில் ஒழுக்கச் சீர்கேட்டை நோக்கி வெகு வேகமாக ஓடிக்கொண்டிருக்கும் மனித சமூகத்தின் பிடரியைப் பிடித்து ஒழுக்கவியலின் பக்கம் இழுத்து வரவேண்டிய தேவையேற்பட்டுள்ளது.

இப்பணியைச் செய்யும் ஆற்றலும் ஆக்கமும் இஸ்லாத்தில் மட்டுமே உள்ளன. இஸ்லாம் எனும் ஒப்பற்ற

மார்க்கத்தின் உயர்ந்த போதனைகளின் துணையால் இஸ்லாமிய இயக்கங்களும் இஸ்லாமிய அழைப்பாளர்களும் இப்பணியை ஆற்றிடவேண்டியது அவசியமாகும்.

இவ்வகையில் ஒழுக்கவியலின் சிறப்பு இஸ்லாத்தின் சிறப்பம்சம் ஆகிய இரண்டையும் தெளிவுபடுத்தும் இந்நூலை வெளியிடத் தீர்மானித்தோம். இந்நூலை ஆக்கிய ஜம்இய்யாவின் பிரச்சாரகரும், உண்மை உதய இஸ்லாமிய கொள்கை விளக்க மாத இதழின் ஆசிரியருமான எஸ்.எச்.எம். இஸ்மாயில்(ஸலபி) அவர்களுக்கு எமது நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

நமது சகோதரர்கள் அனைவரும் இந்நூலைப் படித்தால் பயன் பெறுவதுடன் எழுத்தாளரையும் ஊக்கப்படுத்த வேண்டும் என வேண்டிக்கொள்கின்றோம்.

எல்லாம் வல்ல அல்லாஹ் இப்பணியை அங்கீகரித்து, எம்மை ஒழுக்கவியலில் உயர்வடையச் செய்வானாக!

இவண்,
N.P.M. அபூபக்கர் சித்தீக மதனி,
பொதுத் தலைவர்,
ஜம்இய்யது அன்சாரிஸ் சுன்னதில் முஹம்மதிய்யா,
பறகஹதெனிய, வேஉட.
இலங்கை.
01-10-2000

# இஸ்லாமிய ஒழுக்கவியல்

மனித வாழ்வில் ஒழுக்கம் உயிரைவிட உயர்வாக மதிக்கத் தக்கதாகும். ஒழுக்க நெறி இன்றேல் மனிதனுக்கும் மிருகத்திற்குமிடையில் வேறுபாடு இல்லாமல் போய்விடும். மனிதனிடம் மற்றப் படைப்புக்களிடமில்லாத சிறப்பம்சம் ஒன்று உண்டென்றால் அது ஒழுக்க நெறியுடன் கூடிய வாழ்வேயாகும்.

மனிதன் பகுத்தறிவு பெற்ற படைப்பு என்பதால் உயர்ந்தவன் என்று கூறப்படுகின்றது. உண்மையில் வெறும் பகுத்தறிவால் மனிதன் உயர்வினைப் பெற்றிடுவதில்லை. அந்தப் பகுத்தறிவைப் பயன்படுத்தி நல்லதையும் தீயதையும் இனம் கண்டு நல்லதை ஏற்று அல்லாததை ஒதுக்கி வாழும் போது தான் அவன் உயர்வினைப் பெறுகின்றான்.

95ம் அத்தியாயமாகிய "அத்தீனில்" மனிதனை மிக உயர்ந்த நிலையில் படைத்துள்ளோம் எனக் கூறிய அல்லாஹ் விசுவாசம் கொண்டு நற்கருமங்கள் செய்வோரைத் தவிர மற்ற அனைவரையும் தாழ்ந்தோரிலும் தாழ்ந்தோராக ஆக்கி விட்டோம் எனத் தொடர்ந்து கூறுகின்றான்.

இது மனிதன் பகுத்தறிவால் உயர்வு அடைவதில்லை. பண்பாட்டாலும் சீரிய பழக்க வழக்கங்களாலுமே மனிதன் உயர்வை அடைகின்றான் என்பதை எடுத்துக்காட்டுகின்றது. உண்மையில் பகுத்தறிவுதான் உயர்வுக்குக் காரணமென்றால் பைத்தியக்காரர்களைத்

தவிர மற்ற அனைவரும் உயர்ந்தவர்களாகவே இருக்க வேண்டும். ஏனெனில் காபிர்களும் கொடும்பாவிகளும் பகுத்தறிவு பெற்ற படைப்புக்களே!

எனவே, இஸ்லாம் உயர்வுக்கு அளவுகோலாக பகுத்தறிவைக் கொள்ளவில்லை. பகுத்தறிவு பெற்று பண்பாடு இழந்து மிருக உணர்வுடன் நடமாடும் மனித மிருகங்களை "அஸ்பலஸ்ஸாபிலீன்" மிகக் கீழானோரிலும் கீழானோர் எனக் குர்ஆன் வர்ணிக்கின்றது.

பகுத்தறிவு கொடுக்கப்பட்டிருந்தும் அதைப் பயன்படுத்தி பயன் பெற்று சத்தியத்தையும் அசத்தியத்தையும் உணர முயலாதோரைப் பற்றி அல்குர்ஆன் இப்படிக் கூறுகின்றது.

நிச்சயமாக மனிதர்களிலும், ஜின்களிலும் அநேகரை நரகத்திற்காகவே நாம் படைத்திருக்கின்றோம். (அவர்கள் எத்தகையோரென்றால்) அவர்களுக்கு இருதயங்கள் இருக்கின்றன, எனினும் அவற்றைக் கொண்டு (நல்லுபதேசங்களை) அவர்கள் உணர்ந்து கொள்ளமாட்டார்கள். அவர்களுக்கு கண்களுமுண்டு, எனினும் அவற்றைக் கொண்டு (இவ்வுலகிலுள்ள அத்தாட்சிகளை) அவர்கள் பார்க்கமாட்டார்கள். அவர்களுக்குச் செவிகளுமுள்ளன. எனினும் அவற்றைக் கொண்டு நல்லுபதேசங்களைச் செவிசாய்க்க மாட்டார்கள். இத்தகையோர் கால்நடைகளைப் போன்றோர்! இல்லை இல்லை அதைவிட மோசமானவர்கள்!! இத்தகையோர் தாம் (நம் வசனங்களை) அலட்சியம் செய்தவர்களாவர்."

(7:179)

எனவே மனிதர்களின் உயர்வு என்பது அவன் பெற்றிருக்கும் பகுத்தறிவிலோ, கல்வி ஞானத்திலோ இல்லை! அப்படியிருந்தால் செய்த்தான் உயர்வு பெற்றிருப்பான். மனிதனின் உயர்வு பகுத்தறிவைப் பயன்படுத்தி சத்திய வழியில் வாழ்கிறானா? இல்லையா? என்பதிலேயே தங்கியுள்ளது. எனவே ஈமானுடன் கூடிய ஒழுக்கமே அல்லாஹ்வின் பார்வையில் உயர்வைத் தரும்.

இருபதாம் நூற்றாண்டின் மனிதன், தன் அறிவியல் ஆராட்சியால் விஞ்ஞானக் கண்டுபிடிப்புக்களால் விண்ணைக் கடந்து செல்லுமளவுக்கு வியாபகம் அடைந்திருந்தாலும் பண்பாட்டுப் பக்குவத்தில் அதள பாதளத்திற்குச் சென்று கொண்டிருக்கிறான்.

ஒவ்வொரு மனிதனும் ஏமாற்றும் ஓநாயாக, தன் இனத்தையே எதிரியாகக் காணும் நாயாக, வஞ்சகம் செய்யும் நரியாக, வறியோரை ஏமாற்றி விழுங்கி ஏப்பமிடும் முதலையாக, வார்த்தையிலும் உதட்டுப் புண் சிரிப்பிலும் விஷத்தைக் கலந்து வைத்துள்ள பாம்பாய், சுரண்டும் எலியாய்...................... என்று கிட்டத் தட்ட இல்லை இல்லை முழுக்க முழுக்க நடமாடும் மிருகங்களாக மாறிக் கொண்டிருக்கின்றான்.

மனிதாபிமான உணர்வுகளையும், மனித நேயத்தையும் ஒழுக்க விழுமியங்களையும் பண்பாட்டு பக்குவத்தையும் கொஞ்சம் கூட சிந்திக்காது, தற்காலிக நலன் சடவாத, உலகாயுத சிந்தனையுள் மூழ்கி மிருகமாக மாறும் மனிதனை மாற்ற வேண்டாமா? இதை யார் செய்வது?

உண்மையில் ஒழுக்கம் பற்றி உலக மதங்களும் கொள்கைகளும் ஓங்கி முழங்கினாலும் இவ்வாறு வீழ்ச்சியை நோக்கி விரைந்து செல்லும் மானிட சமூகத்தைத் தடுத்து நிறுத்திவிடத்தக்க பலமோ, வழிமுறையோ, வழிகாட்டலோ அவைகளிடம் கிடையாது. மாறிச் செல்லும் மனித சமூகத்தை வழி மறித்து நல் வழியில் அழைத்து வரும் ஆற்றலும் ஆரோக்கியமான வழிமுறைகளும் இஸ்லாத்திடமே உள்ளன.

அறிவியல் உலகில் மனித நேயமும் மானிட தர்மமும் பலியிடப்பட்டிருப்பதற்கு பல்வேறு காரணங்கள் இருந்தாலும் மனிதன் பற்றி மனிதர்கள் மத்தியில் வரையப்பட்ட வர்ணிப்புக்களும் முக்கிய காரணிகளுள் ஒன்று என்பதை மாறுப்பதற்கில்லை.

'டார்வின்' எனும் உயிரியல் ஆய்வாளன் "மனிதன் குரங்கிலிருந்து படிப்படியாகப் பரிமாணம் பெற்றே இன்றைய ரூபத்தையடைந்தான்" என்ற தவறானதொரு கருத்தை முன்வைத்தான். கிறிஸ்தவ உலகு அறிவியலுக்கெதிராகச் செய்து வந்த அநியாயமான கெடுபிடிகளால் மதத்திற்கும் அறிவியலுக்கும் இடையில் ஒரு போராட்டம் நடந்து கொண்டிருந்தது. டார்வினின் மேற்படி கூற்று கடவுளை மறுக்க நாஸ்தீக ஆய்வாளர்களுக்குக் கிடைத்த நல்லதொரு ஆயுதம் என்பதால் டார்வினிஸம் ஆய்வாளர்களால் வாய்கிழியப் பேசப்பட்டது. ஈற்றில் இக்கூற்று ஏதோ நிரூபிக்கப்பட்ட விஞ்ஞான உண்மைபோன்று மனித மனங்களில் ஆழப் பதிய ஆரம்பித்தது.

இந்த மனப்பதிவு மனித உள்ளத்தில் இயற்கையிலேயே இருந்த 'தன்னைப் பற்றிய உயர்ந்த எண்ணங்களுக்கு' மரண அடி கொடுத்தது. எனவே மனிதன் தான் உயர்ந்த பண்பாட்டுப் பாரம்பரியத்தைக் கொண்ட பரம்பரையில் வந்தவன் என்ற எண்ணத்திலிருந்து சாதாரண குரங்கிலிருந்து வந்தவன் என்கிற கீழான எண்ணத்தைப் பெற்றான். எனவே, இயற்கையிலேயே அவனிடம் குரங்குக் குணம் கொஞ்சம் கொஞ்சமாகப் பதிய ஆரம்பித்தது.

இவ்வாறே மனித செயல்கள் அனைத்துக்கும் அடிப்படை பாலியல் ரீதியான உணர்வுகளே என்ற கருத்தை வலியுறுத்திய 'சிக்மென்ட் பிரெய்டின்' கோட்பாடு மனிதப் பண்பாட்டில் மண்ணை வாரி இறைத்தது. இவர் தாய் தன் குழந்தைக்குப் பாலூட்டுவதைக் கூட பாலியல் கண்ணாடியூடாகப் பார்க்கத் தலைப்பட்டார். இவரின் கோட்பாடு கட்டுப்பாடற்ற பாலியல் தொடர்புகளுக்கு வழிகாட்டியது. இன்று இதனால் கண்ணியமான குடும்ப உறவுகள் கூட சிதைந்து போயின. தந்தையால், உடன் பிறந்த சகோதரனால், பெண் பாலியல் வல்லுறவுக்கு உள்ளாக்கப்படுகிறாள். மனிதப் பண்பாட்டிற்கே மரண அடி கொடுக்கும் இத்தகைய மாபாதகங்கள் மேல்நாட்டில் அன்றாட நிகழ்ச்சியாக அதிகரித்த வருகின்றன. இலங்கைத் தீவிலும் இந்த இழி செயல் பரவி வருகின்றது.

டார்வினைப் போலவே சில தத்துவவியலாளர்களும் மனிதனை மிருகமாகக் காணத் தலைப்பட்டனர். "மனிதன் சிந்திக்கத் தெரிந்த மிருகம்" எனக் கூறியோர் மனிதனுக்கும் மிருகத்துக்கும் இடையிலிருக்கும் வேறுபாடாகச் சிந்தனையை மட்டுமே சித்தரிக்கின்றனர். அங்கே

நற்பண்புகள் ஓரங்கட்டப்படுகின்றன; ஒதுக்கப்படுகின்றன.

இவ்வாறே மனிதனைச் சிரிக்கவும், சிந்திக்கவும் தெரிந்த மிருகம் எனக் கூறியோரும், பேசவும், சிரிக்கவும் தெரிந்த மிருகம் என்றோரும், “சிறகுகள் அற்ற சேவல்” எனக் கூறியோரும் மானிட உள்ளங்களிலிருந்த தன்னைப் பற்றி உயர் எண்ணத்தின் உயிர் மூச்சைக் கொஞ்சம் கொஞ்சமாக நிறுத்தி வந்தனர்.

இவ்வாறே பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஓங்கி முழங்கப்பட்டு தற்போது முடமாய்ப் போயுள்ள கொம்யூனிஷக் கோஷமும் மனிதனைச் “சிந்தனையுள்ள இயற்திரமாகச்” சித்தரிக்க முயன்றது. இக்கொள்கையால் கவரப்பட்டவர்கள் இருதயமற்ற இரும்பு மனிதர்களாகவே மாறினர் என்பதை அண்மைக் கால வரலாறு உணர்த்துகின்றது.

இவ்வாறே மனிதன் என்றால் யார்? அவனது தோற்றம், முடிவு எத்தகையது? அவனது செயற்பாடுகள் யாது? என்பன பற்றி ஆய்வு செய்த இறைநம்பிக்கையற்ற வக்கிரப் புத்தி கொண்ட ஆய்வாளர்கள் முன்வைத்த கரடு முரடான விளக்கங்களும், முடிவுகளும் மனித மாண்பினை மரணிக்கச் செய்து அவனுக்குள் மிருக உணர்வை வளர்த்து விட்டுள்ளது.

ஒழுக்க வாழ்வுக்கான அடித்தளம் முதலில் உள்ளத்தில் இடப்பட வேண்டும். அந்த உள்ளத்தின் தூய்மை தான் ஒழுக்கத்தின் அத்திவாரம். உள்ளத்தை இருளடையச் செய்யும் இத்தகைய இழிவான எண்ணங்கள் எழும் வாய்ப்பை இறை மார்க்கமாம் இஸ்லாம் இல்லாமல் செய்து விடுகின்றது.

அல்குர்ஆனில் அல்லாஹ் மனிதன் பற்றிக் கூறும் போது அவன் மண்ணால் படைக்கப்பட்டவன் என்றும், அதில் அல்லாஹ்வின் 'ரூஹ்' ஊதப்பட்டு உயிர் கொடுக்கப்பட்டவன் என்றும் மனித படைப்புக்கள் பற்றி உயர்வாகக் கூறப்படுவதைக் காணலாம்.

இது மனிதனுக்கு "நான் மிருகத்திலிருந்து வந்தவனல்ல, மனிதனாகவே படைக்கப்பட்டு இறை 'ரூஹ்' ஊதப்பட்டவன்" என்கிற உயர் எண்ணத்தைக் கொடுக்கின்றது.

மனிதனைப் படைப்பதற்கு முன்னரே அல்லாஹ் "நான் பூமியில் பிரதிநிதியைப் படைக்கப்போகின்றேன்." (2:30) என்று கூறினான். இதனையறியும் மனிதனிடம் நான் பூமியின் பிரதிநிதியாக, அதனை ஆள்பவனாக படைக்கப்பட்டவன் என்ற உயரெண்ணம் உண்டாகின்றது. நான் ஒரு இழி படைப்பாக இருந்து இந்நிலையை அடைந்தவனல்ல என்பதையும் அவன் உணர்கின்றான்.

அடுத்து அனைத்துப் (பொருட்களின்) பெயர்களையும் அல்லாஹ் ஆதமு(முதல் மனிதனுக்கு)க்குக் கற்றுக்கொடுத்தான் (2:31) என்றும் திருமறை குர்ஆன் கூறுகின்றது.

இது மனிதன் உலகில் உருவான போது எதனையும் உணரும் ஆற்றல் அற்றவனாக, மிருகத்தோடு மிருகமாக வாழ்ந்து காலப் போக்கில் தன் அனுபவத்தால் தான் சில விடயங்களைத் தெரிந்து கொண்டான் என்ற கருத்தை மறுக்கின்றது. நான் ஆரம்பத்திலேயே அறிவுரை கொடுக்கப்பட்டவன், அதுவும் எண்ணையும், எழுத்தையும் படைத்த இறைவனே என் முதல் ஆசிரியனாக

இருந்துள்ளான் என்கிற உயர் எண்ணத்தை இது மனிதனுக்கு ஏற்படுத்துகின்றது.

அடுத்து படைத்தவன், மனிதனுக்கும் அமரர்களுக்குமிடையில் போட்டியொன்றை வைத்து அதன் மூலம் மானிட உயர்வினை நிரூபித்துக் காட்டிவிடுகிறான்.

ஆதத்துக்குப் பொருட்களின் பெயர்களைக் கற்றுக் கொடுத்து விட்டு அவற்றை மலக்குகளிடம் காட்டி "இவற்றின் பெயர்களைக் கூறுங்கள் பார்க்கலாம்" என அல்லாஹ் கூறுகின்றான். மலக்குகளோ "நீ மகா தூயவன்; நீ எங்களுக்குக் கற்றுக் கொடுத்ததைத் தவிர வேறு எந்த அறிவும் எங்களுக்கு இல்லை. நிச்சயமாக நீ முற்றிலும் அறிந்தவனும் ஞானமுள்ளவனுமாய் இருக்கின்றாய்" எனத் தம் அறியாமையை வெளிப்படுத்தினர்.

இதன் பின் அல்லாஹ் அதே பொருட்களை முதல் மனிதனிடம் காட்டி "இவற்றின் பெயர்களை வானவர்களுக்கு அறிவிப்பாயாக" என்று கூறிய போது அவர் அறிவித்தார். என்பதை அருள் மறை குர்ஆன் (2:31-35) கூறுகின்றது.

மனித படைப்பின் ஆரம்பத்தில் நடந்த இந்நிகழ்ச்சியை அறியும் மனிதனிடம் 'இது நான் அல்லாஹ்விடமிருந்து பெற்ற அறிவால் அமரர்களையும் வென்றவன்." எனக்குக் கிடைத்த இந்த உயர்வை நான் இழந்து விடக் கூடாது. எனவே பண்போடும் பக்குவத்தோடும் நான் நடந்திட வேண்டும்' என்ற எண்ணத்தை ஏற்படுத்தி விடுகின்றது.

இந்நிகழ்ச்சிக்குப் பின் அல்லாஹ் 'ஆதத்துக்குப் பணியுமாறு அமரர்களுக்குக் கட்டளையிட சாத்தானைத்

தவிர அனைவரும் பணிந்தனர்' என்றும் கூறுகின்றான். (2:34)

இதன் மூலம் மனிதன் பற்றிய மதிப்பு மிக்க எண்ணத்தை இறைமறை மனித மனதில் பதித்து விடுகின்றது. எனக்கு அமரர்களே பணிந்துள்ளனர். எனவே நான் அமர குணத்தோடு வாழ வேண்டும். சாத்தானிய எண்ணங்களை ஏற்றிடக் கூடாது. எட்டி உதைத்திட வேண்டும் என்ற எண்ணத்தை ஏற்படுத்துகின்றது.

இதன் பின் முதல் மனிதனும் அவரது மனைவியும் சுவனம் எனும் இன்பமயமான இடத்தில் வாழ அனுமதிக்கப்பட்டதையும் சாத்தானின் தூண்டுதலால் தெய்வ கட்டளையை மீறி அவர்கள் தவறு செய்த போது சுவனத்தை விட்டு வெளியேற்றப்பட்டதாகவும், அப்படி வெளியேற்றும் போது அல்லாஹ் "என்னிடமிருந்து உங்களுக்கு நேர்வழி (காட்டல்) வரும். யார் அந்த நேர்வழியைப் பின்பற்றுகிறாரோ அவருக்கு அச்சமும் இல்லை, துக்கமுமில்லை" எனக்கூறி அனுப்பியதாகவும் அருள்மறை கூறுகின்றது. (2:34-38)

இந்நிகழ்ச்சியைக் கூறுவதன் மூலம் ஒழுக்கத்துடன் வாழ வேண்டும் என்ற எண்ணத்தை அல்லாஹ் இயற்கையிலேயே மனிதனிடம் ஏற்படுத்தி விடுகின்றான்.

நான் சுவன பூமியில் இருந்தவன். என் தாயகம் அதுதான். என் தாயகத்தை அடைந்திட வேண்டும். அதற்குரிய ஒரே வழி இறைவனிடமிருந்து வரும் நேர்வழியைப் பின்பற்றுவதே!

என் தாயகத்திலிருந்து என்னை வெளியேற்றியவன் செய்த்தான். நான் அவனுக்குக் கட்டுப்படக் கூடாது.

அவனை எதிரியாக எண்ணி அவனுடன் போராட வேண்டும். அதன் மூலம் சாத்தானிய உணர்வுகளை அடக்க வேண்டும். என்ற உணர்வை ஒவ்வொரு மனிதனும் பெற்றிட இந்நிகழ்ச்சி வழி செய்கின்றது.

ஒழுக்கநெறி தவறி வாழ்தல் கூடாது என்கின்ற எண்ணத்தை மனித மனதில் இயற்கையாகவே பதிய வைக்கத்தக்க சிந்தனைக்கான ஏற்பாடுகளின் பின்னர்தான் மனிதனது வாழ்வு பூமியில் ஆரம்பமானது என்பது அல்குர்ஆனின் கருத்தாகும்.

எனவே அருள்மறை ஒன்றே மனித மனதில் மனிதனைப் பற்றிய உயர்வான மதிப்பீடுகளை ஏற்படுத்தத்தக்க பின்னணிகளைக் கொண்டிருப்பதால் இஸ்லாத்தினால் மட்டுமே பண்பாட்டுப் பாரம்பரியம் மிக்க ஒழுக்க மேம்பாடு மிக்க, நற்பழக்கமும், நற்குணமும் குடிகொண்டதொரு சமூகத்தை உருவாக்க முடியும். உருக்குலைந்து செல்லும் மனித மாண்புகளுக்கு உயிர் கொடுத்து உரமும், பலமும் கொடுத்து நல்லதொரு உருவமும் கொடுக்க முடியுமென்பதைத் தெளிவாக உணரலாம்.

மனித ஒழுக்கத்தில் மாற்றத்தையும், திருப்பத்தையும், திருப்திகர முன்னேற்றத்தையும் ஏற்படுத்திட இஸ்லாம் சில அடிப்படையான போதனைகளைச் சிபாரிசு செய்கின்றது. அவற்றில் சிலதை இங்கே கோடிட்டுக் காட்டுவது மிகவும் பொருத்தமாகும் எனக் கருதுகிறேன்.

**i) இறையச்சம்**

ஒழுக்க சிந்தனையும் நாகரீக நன்னடத்தையும் ஓங்கி வளர இஸ்லாம் வகுத்த வழிகளுள் இறை நம்பிக்கையும் இறையச்சமும் உன்னதமானதாகும். இஸ்லாம் இறை விசுவாசத்தைத் போதிக்கிறது. இறைவன் அனைத்தையும் அறிவான். நம் நடத்தைகள், ஏன் உள்ளத்து ஊசலாட்டங்கள் கூட அவனுக்கு மறைவானதல்ல என்ற நம்பிக்கையை இஸ்லாம் போதிக்கின்றது. அல்லாஹுத்தஆலாவின் அழகுத் திருநாமங்களில் அல் பஸீர்-யாவற்றையும் பார்ப்பவன், அஸ்ஸமீ. - யாவற்றையும் கேட்பவன், அல் அலீம்-அனைத்தையும் அறிந்தவன் என்பனவும் அடங்குகின்றன.

நாஸ்தீக வழியைச் சரிகண்டவர்கள் கடவுள் நம்பிக்கையற்றவர்களாவர். அவர்களுக்கு அவர்களது அறிவும், மனோ இச்சையுமே கடவுள்களாகும். அவர்கள் தம் அறிவுக்கு சரி எனப்படுபவற்றையும் சூழல் சந்தர்ப்பத்துக்கு தன் மனம் எதை விரும்புகின்றதோ அதையும் செயல்படுத்துவர். சில மதங்கள் கடவுள் நம்பிக்கையைப் போதித்தாலும், அவை கூறும் புராணங்களும், சமயச் சம்பவங்களும் 'கடவுள் எதையும் அறிய முடியாதவன்' என்ற எண்ணத்தையேற்படுத்தும் விதத்திலமைந்துள்ளன.

இஸ்லாம் கூறும் இறைநம்பிக்கை ஒரு மனிதனது உள்ளத்தில் ஆழமாகப் பதியுமானால் அவன் தவறு செய்யும் சந்தர்ப்பத்தையும் சூழலையும் அடைந்து, அந்தத் தவறில் ஈடுபடும் ஆற்றலையும் பெற்றிருந்தாலும் அல்லாஹ் பார்த்துக் கொண்டிருக்கிறான் அவன் என்

செயலை அறிகிறான் என்ற எண்ணம் வரும்போது அவன் தவறிலிருந்து விடுபட வழியுண்டாகிறது. ஒரு முஸ்லிமிடம் எந்தளவுக்கு இறை நம்பிக்கை அதிகமாகவுள்ளதோ அந்தளவுக்கு அவன் தவறுகளிலிருந்து விடுபட்டவனாக இருக்கின்றதைக் காணலாம்.

ஒரு முறை ஜிப்ரீல் எனும் அமரர் மனித உருவில் வந்து நபி(ஸல்) அவர்களிடம் சில கேள்விகளைக் கேற்கிறார். அதில் "அல் இஹ்ஸான்- நல்லறம்- என்றால் என்ன என அவர் வினவ."

"நீ அல்லாஹு'வை நேரில் காண்பது போல் அவனுக்கு அடிபணிந்து வாழ்வதாகும். நீ அவனைக் காணாவிட்டாலும் அவன் உன்னைக் காண்கிறான்" என நபி(ஸல்) அவர்கள் விடையளித்தார்கள்.

அறிவிப்பு: உமர்(ரழி)

ஆதாரம் : புகாரி, முஸ்லிம்.

ஒவ்வொரு முஸ்லிமும் இந்த எண்ணத்தை ஆழமாக தனதுள்ளத்தில் பதியச் செய்யக் கடமைப்பட்டுள்ளான். இந்த தூய எண்ணம் நம்வாழ்வில் பாரிய மாற்றத்தை ஏற்படுத்தும். இதற்கு உதாரணமாகப் பின்வரும் நிகழ்ச்சிகளைக் கூறலாம்.

ஒருவர் தன் உறவுக்காரப் பெண்ணொருத்தி மீது அதிக ஆசையும் நேசமும் கொண்டிருந்தார். அந்தப் பெண் ஏதோ ஒரு தேவைக்காக இவரிடம் உதவி கேட்டு வந்தாள். "நீ எனக்கு இணங்கினால் நான் உனக்கு உதவுவேன்" என இவர் கூற அவளும் சங்கடத்தில் சம்மதித்து பணத்தைப் பெற்றுக் கொண்டு செல்கிறாள். அவள் தேவை

முடிந்த பின் குறித்ததொரு நாளில் இருவரும் தனிமையில் சந்திக்கிறார்கள். தனிமையான அச்சூழலில் அப்பெண்ணை அவர் நெருங்குகையில் அவள் “இத்தகில்லாஹ்” “அல்லாஹ்வை அஞ்சிக் கொள். திருமணம் என்ற ஹலாலான முறையிலன்றி என்னை அடைய முயற்சிக்காதே” என்று கூறினாள். இவர் இறையுணர்வு பெற்று தன் தவறிலிருந்து ஒதுங்கிக் கொள்கிறார். அப்பணத்தையும் அவளுக்காக விட்டுவிடுகின்றார். (நீளமான ஹதீஸின் சுருக்கம்.)

அறிவிப்பவர் : அபூஹுரைரா(ரழி)
ஆதாரம் : புகாரி, முஸ்லிம்.

இந்த மனிதர் உள்ளத்தில் இறையச்சம் இருந்து உரிய நேரத்தில் அது உணர்த்தப்பட்டதால் தவறைச் செய்ய சகல வாய்ப்புக்களுமிருந்தும் கூட தவறை விட்டும் ஒதுங்கிவிடுகின்றார். இந்த ஈமானிய பலம் ஒருவனது உள்ளத்தை ஆக்கரமிக்கும் அளவுக்கு அவன் உயர்ந்த ஒழுக்க பண்புடைய மனிதனாகத் திகழ்வான். இஸ்லாமிய உலகின் இரண்டாம் கலீபா உமர்(ரழி) அவர்கள் இரவு வேளையில் எவருக்கும் தெரியாமல் நாட்டு நிலவரத்தையறிய உளவு பார்ப்பது வழக்கம். ஒரு முறை இப்படி வந்தபோது பால் வியாபாரம் செய்யும் ஒரு தாயும் மகளும் எரையாடுவதைக் கேட்டு அதை அவதானித்தார்கள்.

தாய் : மகளே! பாலில் கொஞ்சம் நீரைக் கலந்துவிடு.
மகள் : வேண்டாம் தாயே! இது யாருடைய ஆட்சி

தெரியும் தானே! இது தடைசெய்யப்பட்ட செயலல்லவா?

தாய் : கலீபா உமர் பார்த்துக் கொண்டா இருக்கிறார்!

மகள் : தாயே! உமர் பார்க்காவிட்டாலும் உங்களையும் என்னையும் படைத்த அல்லாஹ் பார்த்துக் கொண்டிருக்கிறான் அதனால் நான் பாலில் நீரைக் கலக்க மாட்டேன்.

இப்படி அவர்களின் உரையாடல் சென்றது. இந்த சாதாரண பெண்மணியிடம் காணப்பட்ட இறையச்ச உணாவை மதித்து உமர்(ரழி) அவர்கள் தனது புதல்வர் ஒரவருக்கு அவளை மணமுடித்துக் கொடுத்தார்கள். அந்தப் பெண்ணிடம் காணப்பட்ட இறையச்சமே அவளை அந்தத் தவறிலிருந்து தடுத்தது. சட்டத்தால் சாதிக்க முடியாததைக் கூட இறையச்சத்தால் சாதிக்கலாம்.

இது போன்ற இஸ்லாமிய வரலாறுகளும் அநேக நிகழ்ச்சிகளும் ஒருவனது ஒழுக்க வாழ்விலும் நாணயத்திலும் நன்னெறிமிக்க நடத்தையிலும் இறையச்சம் பாரிய தாக்கத்தினையேற்படுத்தும் ஆற்றல் பெற்றது என்பதை எடுத்துக் காட்டுகிறன.

### ii) *மறுமை நம்பிக்கை*

இஸ்லாமிய நம்பிக்கைக் கோட்பாட்டில் 'மரணத்தின் பின் நீண்ட நெடிய முடிவே இல்லாததொரு வாழ்வு உண்டு. அங்கே பூவுலகில் அவனவன் செய்த நல்ல தீய செயல்களுக்கான கூலியுண்டு என்ற நம்பிக்கை பிரதானமாகும். ஒரு முஸ்லிமின் வாழ்வின் சகல நகர்வுகளும் மறுமையின் ஈடேற்றத்தை இலக்காகக்

கொண்டிருத்தல் வேண்டும். இதில் அவன் உலக இலாப நஷ்டங்களைக் கூட கவனத்தில் கொள்தல் கூடாது.

ஒரு முறை நபி(ஸல்) அவர்கள் அடுத்த வினாடி உலக அழிவு ஏற்படும் என்ற நிலையில் என்கையில் ஒரு வித்திருந்தாலும் அதை நான் நாட்டிவிடுவேன். என்றார்கள்.

சமூகத்திற்குப் பயன் தரும் நல்ல மரங்களை நடுவது இஸ்லாத்தின் பார்வையில் நல்லறமாகும். உலக அழிவு ஏற்படும்போது விதையை விதைப்பதால் எவருமே பயன் பெறப் போவதில்லை இருப்பினும் ஒரு நல்ல செயலைச் செய்ததற்கான கூலி நிச்சயம் மறுமையில் கிடைத்துவிடும். எனவே ஒரு நல்ல செயலைச் செய்வதால் உடனடிப் பயன் இல்லாது, நேரடிப்பயன் கிட்டாதுவிட்டாலும் கூட மறுமையில் கூலி உண்டு எனத் தூண்டி நல்லறங்களை இஸ்லாம் வாழச் செய்கிறது.

இவ்வாறே தற்காலிகப் பயன் தரும் பாவங்களை மறுமை வாழ்வை நம்பும் ஒரு முஸ்லிம் இலாபக் கணக்குப் பார்த்து சரிகாண முடியாது. வட்டிக்குப் பணம் கொடுத்தால் இலாபம் அடைய முடியும் என்பதால் ஒரு முஸ்லிம் அதில் ஈடுபட முடியாது. ஏனெனில் இது மறுமையில் நஷ்டத்தையேற்படுத்தும்.

இவ்வாறே திருடுவதற்கு நல்லதொரு வாய்ப்புக் கிடைக்கிறது. அந்த வாய்ப்பைப் பயன்படுத்தி திருடினால் அவன் தன் வாழ்வை வளப்படுத்திக் கொள்ளலாம். இச்சந்தர்ப்பத்தில் சடவாத நோக்கில் மறுமை நம்பிக்கையின்றி சிந்திக்கும் மனிதன் திருடவே முற்படுவான். ஆனால் மறுமை வாழ்வில் உறுதியான நம்பிக்கையுடைய

ஒரு முஸ்லிம் தனது மறுமை வாழ்வு பாழ்பட்டுவிடும் எனப் பயந்து அதிலிருந்து ஒதுங்கிக் கொள்வான். எனவே இஸ்லாம் கூறும் மறுமை வாழ்வு பற்றிய நம்பிக்கையில் ஒருவனுக்கு எந்தளவுக்கு பிடிப்பு ஏற்படுகின்றதோ அந்தளவுக்கு அவன் ஒழுக்க சீலனாக வாழ்வான்.

### iii) சூழலை உருவாக்கல்

இஸ்லாமிய ஒழுக்க போதனைகளில் ஒழுக்க விழுமியங்கள் மிக்க சமூக உருவாக்கத்திற்கான நல்லதொரு சூழலை உருவாக்குதல் என்பதும் முக்கியமானதாகும். ஒருவன் எவ்வளவுதான் நல்லவனாயிருந்தாலும் சூழல் அவனிடத்தில் மாற்றத்தையேற்படுத்திவிட வாய்ப்புண்டு. மேற்கூறிய இறை நம்பிக்கை, மறுமை நம்பிக்கை என்பவற்றில் ஒருவன் தளராத உறுதியுடனிருந்தால் சூழலை வென்று ஒழுக்கத்தோடு வாழலாம். எனினும் இந்நம்பிக்கையில் தளர்வு ஏற்படும் போது சூழல் மாற்றத்தையேற்படுத்திவிடும். எனவேதான் முஸ்லிம்கள் எங்கு வாழ்ந்தாலும் அங்கு சூழலில் நல்ல மாற்றத்தை ஏற்படுத்துவதற்காக மஸ்ஜித்களை நிர்மாணம் செய்கின்றனர்.

இவ்வகையில் இஸ்லாமிய அரசு இருப்பின் அது தவறுக்கான அனைத்து வாயில்களையும் அடைக்கும். தவறை விட்டுத் தவிர்ந்து கொள்ள மக்களுக்கு அறிவுரையும் கூறும். குடி குடியைக் கெடுக்கும் எனக் கூறிவிட்டு மது பானச்சாலைகளுக்கு ‘லைசென்ஸ்’ கொடுத்து அதன் மூலம் இலாபம் பெற இஸ்லாமிய அரசு முயலாது.

போதைப் பொருள் பாவனை கூடாது எனப் பிரச்சாரம் செய்வதுடன் அதைப் பெறுவதற்கான அத்தனை வாயில்களையும் அதிகாரத்துடன் அடைத்து விடும். ஏனெனில் போதைப் பொருள் பழக்கமற்ற ஒரு நல்ல மனிதன் கூட மதுபானச் சாலை அருகில் வாழ நேரிட்டால் வாழ்வில் ஏதேனும் சடைவுகள், பின்னடைவுகள் ஏற்படும் போது, நண்பர்கள் உற்சாகப்படுத்தும் போது சாராயத் தவரணைய்யில் சரணடையலாம்.

எனவே இஸ்லாமிய அரசு மது, போதைப் பொருட்கள், விபச்சாரம், வட்டி, அளவை நிறுவை மோசடி, கலப்படம் என்பன போன்ற அனைத்துத் தீமைகளையும் எதிர்த்துப் பிரச்சாரம் செய்யும் அதே வேளை இவையத்தனையையும் தடுப்பதற்கான சகல முயற்சிகளையும் சற்றும் கூட விட்டுக் கொடுக்கும் நளினப் போக்கைக் கடைப்பிடிக்காது கடுமையான சட்டங்களினூடாக மேற்கொள்ளும் இதன் மூலம் நல்லவர்கள் கூட தவறு செய்யும் சூழலை மாற்றி தீயவர்கள் கூட தவறை இலகுவாகச் செய்ய முடியாது என்ற சமூகச் சூழலை இஸ்லாமிய அரசு உருவாக்கிவிடும்.

இதே வேளை சமூகத்தில் அரசின் கண்ணில் மண்ணைத் தூவி விட்டு தவறுக்கான வாயில்களைத் திறந்துவிடும் முயற்ச்சியில் தீய சக்திகள் இறங்கலாம். இந்நேரத்தில் தீமைக் கெதிராக போராடும் உரிமையையும், கடமையையும் இஸ்லாமிய போதனை முழு மனித சமூகத்திலுமிருக்கும் ஆண், பெண் அனைவருக்கும் வழங்கியுள்ளது. இந்தப் போதனை உரிய முறையில் பின்பற்றப்பட்டால் ஒவ்வொரு ஊரிலும் தவறுகள் தலைகாட்ட முற்படும் போதே அந்தந்த ஊர் மக்களாலேயே

அதன் தலைகள் கொய்யப்படும். இதனால் கெட்டவர்களும் நல்லவர்களாக மாறலாம். அல்லது குறைந்தபட்சம் நல்லவர்களாக நடிக்கும் நிர்ப்பந்தத்திற்காவது ஆளாவவர். தீமைகளுக்கெதிரான இந்த சமூகப் போராட்டத்திற்கு இஸ்லாமிய அரசு ஒத்துழைப்பும் நல்கும்.

இவ்வாறு சமூக நெருக்கடிளினூடாகத் தவறுகளைத் தடுக்க முற்படுவதை மாற்று மதத்தவர் பலர் தனிமனித சுதந்திரத்தில் தலையிடும் மனித உரிமை மீறலாகக் காண்கின்றனர். தவறு செய்பவர்கள் சமூக உரிமைகளைப் பறிப்பது பற்றியோ இவன் மூலம் ஏற்படும் சமூகப் பாதிப்புக்கள் பற்றியோ இவர்கள் கொஞ்சம் கூட கவலைப்படுவதில்லை.

குடிக்கும் ஒருவன் போதையில் பாதையில் அநாகரீகமாக நடக்கிறான். அசிங்கமான வார்த்தைகளால். சத்தமிட்டு பேசுகிறான். நிர்வாணமாக கூட அழைகிறான். இதனால் அவனை அண்டி வாழ்பவர்கள் அவஸ்தைப் படுகின்றனர். பெண்கள் கூச்சப்படுகின்றனர். சிறுவர்களது மனதிலும் நடத்தையிலும் ஒழுக்க வீழ்ச்சியிலும் இது பாரிய தாக்கத்தையேற்படுத்துகின்றது. இப்படி எத்தனையோ தொல்லைகள் இவனால் சமூகத்திற்குண்டு.

சமூகமாகச் சேந்து குடிகாரர்களைத் திருத்த முற்படுவது தனி மனித சுதந்திரத்திற்கு எதிரானது என்று ஒப்பாரி வைக்கின்றனர். மேலைத்தேய மேதாவிகள். ஆனால் போதைப் பாவனையாளர்களால் சமூகம் பாதிக்கப்படுவது பற்றியோ சமூகசுதந்திரத்துக்கு பங்கம் விளைவது பற்றியோ இவர்களுக்கு கவலை இல்லை. இதைப் பற்றி இவர்கள் சிந்திப்பதுமில்லை.

குடிக்கும் ஒருவனின் குடும்பம் அல்லல்படுகின்றது. அவன் மனைவி அன்றாடம் அடி உதை என நரக வாழ்வு வாழ்கிறாள். குழந்தைகள் அவனைக் கண்டால் பேயைக் கண்டது போல் மிரட்சியடைகின்றனர். இவனால் இவன் குழந்தைகளின் கல்வி பாதிக்கப்படுகின்றது. கௌரவமும் சுயமரியாதையும் கொலை செய்யப்படுகின்றன. சக நண்பர்களுடன் சமமாகப் பழக முடியாதபடி அவர்களது சுயமரியாதை இழக்கப்படுகின்றது. இந்தக் குழந்தைகளினதும் அவன் மனைவியினதும் உறவினர்களினதும் உணர்வுகளும் குடி அரக்கனால் கோரமாக நசுக்கப்படுவது ஏன். இவர்களுக்குப் புலப்படுவதில்லை?

மது போதைக்குள்ளான ஒருவன் வாகனத்தைச் செலுத்துகின்றான். கட்டிடங்களில் மோதி அரச சொத்தை அழிக்கிறான். வாழ வேண்டிய பிஞ்சுகள் மீது வண்டியை ஏற்றிக் கொல்கிறான். பல நல்லவர்களைக் காயப்படுத்துகிறான்.

மது அருந்துதல் என்ற தவறான நடத்தையைத் தனிமனித சுதந்திரம் என்ற பெயரில் வளரவிட்டால் சமூகத்தில் பல நல்லவர்களது உயிர் வாழும் உரிமை கூட கேள்விக்குள்ளாவது பற்றி ஏன் இவர்கள் சிந்திப்பதில்லை? இதற்கு என்ன பதில் கூறப்போகின்றனர்.

- சமூக நலன்களைக் கருத்திற் கொண்டு சமூக நெருக்குதலூடாக இந்த மது அரக்கனை அடக்க முற்படும்போது மேலைத்தேய மேதாவிகளும் அவர்களது கீழைத்தேய கிளிப்பிள்ளைகளும் தனிமனித சுதந்திரம் செத்துவிட்டதாகச் கூச்சல் போடுவது அர்த்தமற்றது என்பதை இதிலிருந்து புரியலாம்.

இவ்வாறே இந்த போதைப் பாவனைக்குள்ளானவன் பல்வேறு நோய்களுக்குள்ளாகிறான். பல்வேறு குற்றச் செயல்களில் ஈடுபடுகின்றான். இவன் நோயில் படுத்தாலோ தவறுகளுக்குத் தண்டனைக்காக சிறைப்பிடிக்கப்பட்டாலோ அரசாங்கம் இவனுக்காகச் சில செலவுகள் செய்ய நேரிடுகின்றது. அதற்கான பணம் வரியாக முழு நாட்டு மக்களிடமிருந்து தான் பெறப்படுகின்றது. எனவே இவன் செய்த தவறினால் எனது பணமும் செலவிடப்படுகின்றது என்ற முழு உரிமையுடன் இத்தகைய தவறுகளுக் கெதிராகப் போராடும் உரிமையை சமூகம் பெறுகின்றது.

போதைப் பாவனை போன்றே சூதாட்டம், விபச்சாரம், வட்டி போன்ற அனைத்துத் தவறுகளுக்கும் ஒரு எதிர் வினையுண்டு. அது சமூகத்தைப் பாதிக்கிறது. நலிவடையச் செய்கின்றது. எனவே தனிமனிதனோ ஒரு குழுவோ தவறு செய்யும் பட்சத்தில் அதைத் தடுத்து நிறுத்தும் உரிமையும் கடமையும் சமூகத்திற்குண்டு.

இப்பணியைச் செய்வதனால் மாபெரும் மறுமைப் பேற்றைப் பெற முடியும். என்பதும் இதைச் செய்யத் தவறும் பட்சத்தில் முழு சமூகமும் அல்லாஹ்வின் பார்வையில் குற்றத்துக்கு உடந்தையாக இருந்தவர்களாகக் கருதப்பட்டு தண்டிக்கப்படுவர் என்பதும் இஸ்லாமிய போதனையாகும்.

இவ்வாறான இறுக்கமான சமூக அமைப்பு இருப்பின் தவறுகள் காலத்துக்குக் காலம் தலைகாட்டினாலும் உடனுக்குடன் அது கொய்யப்படும். துரதிஷ்டவசமாக முஸ்லிம் கிராமங்களிலிளிருந்த இத்தகைய கட்டுப்பாடுகள், தகுதியற்ற தலைமைகள், அரசியல் தலையீடுகள் போன்ற பல்வேறு காரணங்களால் உடைந்து போயுள்ளது.

தவறுகள் நடக்காத சூழலை உருவாக்கும். முயற்சியில் அரசின் அதிகாரமும் சமூகத்தின் செல்வாக்கும் கைகோர்த்திணைந்து எடுக்கும் நடவடிக்கையால் அனைத்து வாயில்களும் அடைக்கப்பட்டு தவறு செய்பவர்கள் சமூகச் சாடலையும் சமூகப் புறக்கணிப்பையும் தாங்க முடியாது திருந்தி வாழ்வதற்கான சந்தர்ப்பத்தையும் இஸ்லாம் ஏற்படுத்திக் கொடுக்கும்.

**iv) தண்டனைகள்**

இறையச்சம், மறுமை நம்பிக்கை தவறுக்கான வாய்பைத் தவிர்த்தல் போன்ற அனைத்துத் தடைகளையும் தாண்டி அதன் பின்னும் தவறு செய்யும் நபர்களுமிருக்கலாம். இஸ்லாமிய ஆட்சியில் இவர்களைச் சட்டம் தன் இரும்புக் கரம் கொண்டு நசுக்கி தவறு பற்றிய அச்சத்தைப் பிறருக்கும் ஏற்படுத்தி தவறின் தலையைக் கொய்து விடும்.

ஏனைய சமயங்களும் போதனைகளும் ஒழுக்கவியலைப் போதித்தாலும் ஒருவன் அதனை மீறினால் என்ன தண்டனை கிடைக்கும் என்பது பற்றி அவை மூச்சுவிடவில்லை. இஸ்லாம் தவறு செய்பவர்கள் தண்டிக்கப்பட வேண்டும். அத்தண்டனை தவறு செய்தவனுக்கு இனி நான் இத்தவறைச் செய்யக் கூடாது என்ற உணர்வையும் அதைப் பார்ப்பவர்கள் நாம் இது போன்ற தப்புக்களைச் செய்திடக் கூடாது என்ற அச்ச உணர்வையும் ஏற்படுத்த வேண்டும்.

இவ்வகையில் திருட்டுக்கு கைவெட்டு, கற்பழிப்பு, கொலைக்கு மரண தண்டனை, அவதூறு, மதுவருந்தல்,

திருமணத்திற்கு முன்னர் விபச்சாரம் செய்தல் போன்றவற்றிக்குக் கசையடி, திருமணத்திற்கு பின் விபச்சாரம் செய்து ஒப்புக் கொண்டாலோ அல்லது 4 சாட்சிகள் மூலம் நிரூபிக்கப்பட்டாலோ கல்லெறிந்து கொல்லல் என்பன போன்ற குற்றவியல் சட்டங்களை இஸ்லாம் அறிமுகப்படுத்தியுள்ளது.

இத்தண்டனைகள் கடுமையானவை, காட்டுமிராண்டித்தனமானவை, குற்றவாளிகள் மீது கருணை காட்டாதவை, பிற்போக்கானவை என்றெல்லாம் விமர்சிக்கப்படுகின்றது. இந்தத் தண்டனைகள் கடுமையானவை என்பது உண்மைதான். ஆயினும் திருட்டு, கொலை, கொள்ளை போன்ற குற்றச் செயல்களும் அதன் எதிர்வினைகளும் இஸ்லாத்தின் தண்டனைகளை விட கொடுமையானவை என்பதையும் இவர்கள் கவனித்துப் பார்க்க வேண்டும்.

திருட்டுக் குற்றங்களால் எத்தனையோ உயிர்கள் பலியாகின்றன. திருடர்களால் முழு உலகிலும் பல்லாயிரம் உயிர்கள் பறிக்கப்படுகின்றன. இந்தத் திருடர்கள் மீது கருணை காட்டக் கூடாதா என்கின்றனர். இது விசித்திரமாகவுள்ளது.

படுத்த படுக்கையாக இருக்கும் தன் தாய் தந்தைக்கு மருந்தெடுக்க பணத்தோடு போனவன் பணத்தையும் பறிகொடுத்து உரிய நேரத்தில் உரிய வைத்தியம் செய்யாததால் தன் தாய், தந்தையையும் பறிகொடுத்து பைத்தியம் பிடித்தவன் போல் பதறுகிறானே! இவன் மீது இவர்களுக்குக் கருணை வருவதில்லை! இவன் பணத்தைப்

பறித்த பாவி மீது மட்டும் இவர்களுக்குப் பாசம் பொத்துக் கொண்டு வருகிறதாம். இது தான் கருணையா?

தன் மகளின் மணவாழ்வுக்கென்று வாயைக் கட்டி வயிற்றைக் கட்டி கஷ்டப்பட்டு உழைத்ததில் கொஞ்சம் கொஞ்சமாக குருவி கூடுகட்டுவது போல் சேர்த்து வைத்து திருமணத் தேதியும் குறிக்கப்பட்ட பின் இந்த வீட்டிலும் பணம், நகை நட்டு இருப்பதை உணர்ந்த கொடியவன் ஒருவன் கொள்ளையடித்துக் கொண்டு போய்விடுகிறான். இந்தக் கொடியவன் மீது பாசத்தைச் சொறிய வேண்டுமென்கிறது இவர்களது கருணையுள்ளம்.

அனைத்தையும் பறிகொடுத்து கிடைக்க இருந்த மணவாழ்வு கிடைக்காததால் மனம் உடைந்து தன் தலையணையைக் கண்ணீரால் கழுவும் இந்தக் கன்னி மீது, சில வேளை இந்த சமூகத்தில் இனி எப்படி தலைகாட்டுவது என்று நஞ்சு, தூக்குக் கயிறு என்று உயிரையே மாய்த்து மணமேடை காண ஆயிரம் கனவுகளோடு வாழ்ந்து பிணமேடையேறிய இந்த மங்கை மீது மட்டும் இவர்களுக்கு பாசம் மலர மாட்டேன் என்கிறதே? அது ஏன்? கருணைக் கடல் வற்றிவிட்டதா?

இத்தகைய கொடுமைகள் பல புரிந்த பாவிகள் இவர்களின் சட்டத்தின் முன்நிறுத்தப்பட்டாலோ பெரும்பாலும் சட்டத்திலுள்ள ஓட்டை உடைசல்களைப் பயன்படுத்தி தப்பிவிடுகின்றனர்.

அப்படியே குற்றம் நிரூபிக்கப்பட்டாலும் அவர்களுக்கு கிடைக்கும் கூடியபட்சத் தண்டனை சிறைவாசம் தான். இந்த சிறைவாசம் குற்றவாளிகள் திருந்தவதற்கான சந்தர்ப்பம் என இவர்கள் கூறுகின்றனர்.

சிறை சென்று திருந்திய திருடர்களின் பட்டியல் ஒன்று காட்ட முடியுமா? சிறையில் சென்று திருந்துவதற்கு அங்கென்ன நல்லவர்களும் மகான்களுமா இருக்கின்றனர். குற்றவாளிகள் பலர் ஒன்று சேர்த்து விடப்படுகின்றனர். இதன் மூலம் குற்ற உணர்வு அதிகரிக்கவே அதிக வாய்ப்புண்டு. சாதாரணத் திருடர்கள் சீனியர் திருடர்களுடன் தொடர்பு கொண்டு தம் தொழிலில் புதிய புதிய டெக்னிக்களைக் கற்றுக் கொள்கின்றனர்.

சிறை வாழ்வு அவன் உள்ளத்தை உறுத்தும் இதன் மூலம் அவன் திருந்த வாய்ப்புண்டு என்பர். சிறைவாழ்வு எத்தனை பேருக்கு மனதை உறுத்துகின்றது. அங்கு வேளாவேளைக்கு நல்லோரின் வரிப் பணத்தில் உணவு, தேனீர், சினிமா, பத்திரிகை, விளையாட்டு என்று சுக வாழ்க்கை. இதனால்தான் சிறை கூடத்தை “மாமியார் வீடு” என செல்லமாகக் கூறுகின்றனர். உண்மையில் சிறை வாழ்வு அவனுக்கு அச்சமற்ற உணர்வைக் கொடுக்கின்றது. இதனால் அவன் குற்றங்களைத் துணிந்து செய்கிறான். ஒருவன் எத்தனை முறை சிறை செல்கிறான் என்பதை வைத்தே அவனுக்கு ரவுடிகளிடத்தில் ராஜ மரியாதை அதிகரிக்கின்றது. உண்மையில் சிறை வாழ்வு மனதை உறுத்தும் என்றிருந்தால் ஒருவன் பல முறை சிறை செல்லும் அன்றாடக் காட்சியை காணமுடியாது.

இஸ்லாம் கூறுவது போல் கையைத் துண்டித்தால் அவனாக நினைத்தாலும் மீண்டும் திருட முடியாது. அவன் மக்கள் மன்றத்தில் அடையாளம் காட்டப்படுவதால் ஊர் விட்டு ஊர் போய் மக்களை மடையர்களாக்கி அவனால் பிழைப்பு நடத்த முடியாது. இந்தத் தண்டனை பற்றிய

அச்சமே திருட்டுக் குற்றத்தை ஒழித்து விடும். ஒரு நாட்டில் பத்து திருடர்களுக்கு பகிரங்கமாகச் கைகளை வெட்டினாலே நாடு திருந்தப் போதுமானது. இதன் மூலம் திருடர்களைப் பிடிப்பதற்கும் அவர்களைப் பராமரிக்கவும் செய்யப்படும் செலவுகள் குறையும், திருட்டுக் குற்றம் ஒழியும். மக்களும் மன நிம்மதியடன் வாழலாம்.

இது திருட்டுக்கு மற்றும் உரியதல்ல. எல்லா குற்றங்களுக்கும் பொறுந்தும். எனவே இஸ்லாமிய குற்றவியல் சட்டம் உலகில் ஒழுக்கமும் நற்பண்பும் நிறைந்த தொரு சமூக வாழ்வுக்கு நல்லதொரு வழியாகும். இதனை வேறு கோட்பாடுகளிலோ சமய சிந்தனைகளிலோ காண முடியாது.

### v) நடைமுறைச் சாத்தியமானது

“ஏட்டுச் சுரக்காய் கறிக்குதவாது” என்பர். இஸ்லாமிய ஒழுக்க போதனைகள் ஏட்டுச் சுரக்காய் அல்ல! அவை நடைமுறைச் சாத்தியமான போதனைகளே!

சில ஒழுக்கக் கோட்பாடுகள் கொல்லாமைக் கோட்பாட்டைப் போதிக்கின்றன. எந்த உயிரையும் கொல்தல் கூடாது என்ற இந்தப் போதனைப் பிரகாரம் மனிதன் இப்பூவுலகில் வாழ்தல் அசாத்தியமானதாகும்.

இவ்வாறே சில ஒழுக்கவியல் கோட்பாடுகள் துறவரக் கோட்பாட்டைப் போதிக்கிறது. ஆணோ, பெண்ணோ வாழ்க்கைத் துணையின்றி வாழ்தல் அசாத்தியமானதாகும். இந்த இயற்கை நியதியை மீறி துறவரத்தை மேற்கொண்டோர் ஒன்றில் துறவரத்தை துறந்தனர் அல்லது

விபச்சாரம், தன்னினச் சேர்க்கை என துறவரத்துக்குத் துரோகம் செய்தனர்.

"ஒரு கன்னத்தில் அறைந்தால் மறு கன்னத்தையும் திருப்பிக் கொடு" என இயேசு கூறியதாக கிறிஸ்தவம் கூறுகின்றது.

"இன்னார் செய்தாரே ஒறுத்தல் அண்ணார் நாண நன்னயம் செய்துவிடல்." என்று வல்லுவர் குறலில் போதிக்கிறார்.

தன்னை அடித்த எதிராளியிடம் சராசரி மனிதன் எந்த உணர்வை வெளிப்படுத்துவானோ அந்த இயற்கை உணர்வுக்கு மாற்றமானதாகவே இப்போதனை அமைந்துள்ளது. ஒரு சராசரி மனிதனுக்கு இது சாத்தியமற்றதாகும். ஏன் இக்கோட்பாட்டைப் போதித்த மகான்களால் கூட தொடர்ச்சியாக இக் கோட்பாட்டைக் கடைப்பிடித்தல் என்பதும் நடைமுறைச் சாத்தியமற்றதே! இயேசுவை சிலுவையில் அறையமுன் கைது செய்கையில் ஒருவன் கன்னத்தில் அறைகிறான். இயேசு மறு கன்னத்தைக் கொடுக்காமல் ஏன் எனக்கு அறைந்தாய் என்று எதிர்க் கேள்வி தான் கேட்கிறார்.

இஸ்லாத்தைப் பொறுத்தவரை அறைந்தால் திருப்பி அறைய அனுமதித்து மனித இயல்பை அங்கீகரிப்பதுடன் மன்னிப்பதையும் சிறப்பித்துக் கூறுகின்றது.

அதே வேளை தீயவன் தீமை செய்யும் போது அவனுக்குத் துணை போவது போல் அஹிம்ஸையைக் கடைப்பிடிக்காது பழிவாங்கல், தண்டனை வழங்கள் என்பவற்றின் மூலம் தீமையை எதிர்ப்பதுடன் தீமை

செய்பவனுக்கு அதில் அச்சத்தை ஏற்படுத்தும் விதத்தில் செயல்பட இஸ்லாம் தூண்டுகிறது.

மனித இயல்பையும், எதிர்பார்ப்புக்களையும் ஈடு செய்யாத கவனத்தில் கொள்ளாத போதனைகள் எவ்வளவு தான், கேட்பதற்கு இனிமையானதாகவும், பார்ப்பதற்குப் புனிதமாகவும் தென்பட்டாலும் அவை ஏட்டுச் சுரக்காய்களாகவே இருக்கும். நடைமுறை உலகுக்கு சற்றும் உதவாது. இவ்வகையில் இஸ்லாமியப் போதனைகள் நடைமுறைச் சாத்தியமானது என்பதால் ஒழுக்க மாண்புகள் மிளிரும் சமூக உருவாக்கத்துக்கு அது ஒன்றே சிறந்த வழியாகும். எனக் கூறலாம்.

### vi) *முன்மாதிரி*

எதற்கும் ஒரு முன்மாதிரியை மனிதன் எதிர்பார்க்கிறான். எவ்வளவுதான் உயர்ந்த தத்துவங்களையும், போதனைகளையும் போதித்தாலும் அவற்றைப் போதித்தவர்களோ அல்லது வளர்த்தவர்களோ நடைமுறைப்படுத்திக் காட்டியிராவிட்டால் அப்போதனையைப் படிப்பவன் அதனால் கவரப்படவும் மாட்டான். இதை என் வாழ்வில் கடைப்பிடிக்க வேண்டும் என்ற உந்துதலைப் பெறவுமாட்டான். “சொல்வது அனைவருக்கும் இலகு தான் செய்தல்லவோ பார்க்க வேண்டும்” என்ற சிந்தனையே அவன் உள்ளத்தில் உதிக்கும்.

இஸ்லாம் போதிக்கும் இரக்கம், ஈகை, கருணை, காருண்யம், விட்டுக் கொடுத்தல், மன்னித்தல், தவறை

மறைத்தல், பணிவு கணிவு போன்ற எந்த உயர் பண்பென்றாலும் அண்ணல் நபியின் வாழ்வில் முன்மாதிரியுண்டு. எனவே இஸ்லாமிய போதனைகள் நடைமுறைப்படுத்திக் காட்டப்பட்டதனால் அது நடைமுறைச் சாத்தியமற்றது என்ற கூற்றுக்கு இடமில்லை. “செய்தல்லோ பார்க்க வேண்டும்” என்ற எதிர்க் கேள்விக்கும் இடமில்லை.

இவ்வாறு நோக்குகையில் இஸ்லாம் ஒன்றே சீரிய ஒழுக்க மாண்புகள் மிளிரும் சமூக உருவாக்கத்திற்கான சக்தியை தன்னகத்தே கொண்டுள்ளது என்பதை நாம் சந்தேகமறக் கூறலாம்.

## இஸ்லாத்தில் ஒழுக்கவியலின் சிறப்பு

இஸ்லாம் அடிப்படையான சில கொள்கைக் கோட்பாடுகளையும், ஆன்மீக வளர்ச்சிக்கான சில அனுஸ்டானங்களையும் அன்றாட வாழ்வில் நாம் அனுசரிக்க வேண்டிய அழகிய ஒழுக்க போதனைகளையும் (அக்லாக்) தன்னகத்தே கொண்ட சன் மார்க்கமாகும். இஸ்லாம் கூறும் ஏகத்துவச் சிந்தனையும் இறைவிசுவாசக் கோட்பாடுகளும் ஏனைய மதங்களின் கடவுள் கோட்பாட்டை விட சிறந்ததாகும்.

இஸ்லாம் போதிக்கும் வணக்க வழிபாடுகள் ஏனைய மதங்கள் கூறும் வழிபாடுகள், சடங்கு சம்பிரதாயங்களை விட பயனுள்ளதும் பகுத்தறிவுக்கு ஏற்றதுமாகும்.

இவ்வாறே இஸ்லாமிய ஒழுக்க போதனைகளும் தன்னிறைவு பெற்றதாகும். இருப்பினும் ஒரு மனிதனைப் பார்த்ததும் அவனது கொள்கைச் சிறப்பையோ

வழிப்பாட்டின் உயர்வையோ அறிந்திட முடிவதில்லை. இவ்வாறே இஸ்லாமிய ஒழுக்க போதனைகளும் தன்னிறைவு பெற்றதாகும். இருப்பினும் ஒரு மனிதனைப் பார்த்ததும் அவனது கொள்கைச் சிறப்பையோ வழிப்பாட்டின் உயர்வையோ அறிந்திட முடியாது. ஆனால் ஒருவனின் பண்பாடு, பழக்கவழக்கம், மற்றவருடன் உறவாடும் போது கடைப்பிடிக்கும் ஒழுங்குகள் பளிச்செனப் புலப்படும்.

இஸ்லாமியப் பிரச்சாரத்தில் கொள்கைச் சிறப்பைக் கூறி இஸ்லாத்தின் பால் அழைப்பதும் ஒரு வழிமுறையாகும். அதே வேளை தனது ஒழுக்க வாழ்வு மூலம் இஸ்லாத்தின் பக்கம் பிறரை ஈர்ப்பதும் ஒரு வழிமுறையாகும். இஸ்லாத்தின் வளர்ச்சியில் நபி(ஸல்) அவர்களினதும் நபித் தோழர்களினதும் நல்ல பண்பாடுகள் முக்கிய பங்கை வகித்தன என்பது வரலாற்று உண்மையாகும். மக்கா வெற்றியின் பின் நபி(ஸல்) அளித்த பொது மன்னிப்பு, இஸ்லாத்தின் மிகப் பெரும் எதிரிகளைக் கூட இஸ்லாத்தில் இணைய வழி செய்தது. இந்த வகையில் கொள்கையை உள்ளத்தில் ஏந்திய ஒரு முஸ்லிம், வழிபாடுகளைத் தமக்குத் தாமே செய்து கொள்ளும் இஸ்லாமியர் இஸ்லாம் கூறும் ஒழுக்கவியல் கோட்பாட்டைக் கடைப்பிடித்து பிறரை இஸ்லாத்தின் பால் ஈர்ப்பதுடன் இஸ்லாமியர் மீது தப்பெண்ணம் கொண்டோரின் மனதை மாற்றவும் முயற்சித்தல் ஒவ்வொரு முஸ்லிமின் மீதும் கடமையாகும். இந்த வகையில் இஸ்லாம் ஒழுக்கவியல் வாழ்வை வலியுறுத்துகின்றது.

இஸ்லாம் ஒழுக்கவியலுக்கு வழங்கியிருக்கும் சிறப்பினை நபிமொழிகளினூடாக இங்கே நினைவூட்ட விரும்புகின்றேன்.

"மனிதர்களிலேயே நபி(ஸல்) அவர்கள் சிறந்த பண்பாடுடையவராகக் காணப்பட்டார்கள்" என நபி(ஸல்) அவர்களிடம் பத்து வருடங்கள் பணிபுரிந்த அனஸ்(ரழி) அவர்கள் கூறியுள்ளார்கள்.

(புகாரி, முஸ்லிம்)

நபி(ஸல்) அவர்களது கரத்தை விட மென்மையான பஞ்சையோ பட்டையோ நான் தொட்டதில்லை. நபி(ஸல்) அவர்களது மணத்தைவிட சிறந்த வேறெந்த நறுமணத்தையும் நான் வாழ்விலே முகர்ந்ததில்லை. நான் பத்து வருடங்கள் நபி(ஸல்) அவர்களிடம் பணியாற்றியுள்ளேன். அக்காலத்திற்குள் என்னைப் பார்த்து "சீ..." என்ற வார்த்தையைக் கூட அவர் சொன்னதில்லை. நான் செய்த ஏதேனும் காரியத்தை முன்னிட்டு "ஏன் இப்படிச் செய்தாய்?" என்றோ, நான் செய்யாத ஒன்றைக் குறித்து "ஏன் செய்யவில்லை?" என்றோ அவர் என்னிடம் கேட்டதில்லை" என அனஸ்(ரழி) அவர்கள் கூறுகின்றார்கள்.

ஆதாரம் : புகாரி, முஸ்லிம்)

இவ்வறிவிப்புக்கள் நபி(ஸல்) அவர்களைத் தன் வாழ்க்கை வழிகாட்டியாக ஏற்றுக் கொண்ட முஸ்லிம்களை ஒழுக்கவியலை நோக்கி உந்தக் கூடியவைகளாகும். நபி(ஸல்) அவர்கள் தம் பணியாளிடமே பண்போடு நடந்திருக்கும் போது நாம் ஏனையோருடன் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதை ஒவ்வொரு முஸ்லிமும் சிந்தித்தல் அவசியமாகும்.

'உங்களில் யார் நற்பண்புடன் நடந்து கொள்கிறார்களோ அவர்களே உங்களில் சிறந்தோராவர்.' என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர் :அம்ரிப்னு ஆஸ்(ரழி)

ஆதாரம் :புகாரி, முஸ்லிம், திர்மிதி, அஹ்மத்

இங்கே மனிதன் பிறப்பாலோ, படிப்பாலோ, பட்டம், பதவி, பணத்தாலோ உயர்ந்தவனாகிவிட முடியாது. பண்பாட்டால்தான் மனிதன் உயர்ந்திட முடியும் என்ற உண்மை உணர்த்தப்படுகின்றது.

"தீர்ப்பு நாளில் மு.:.மினின் தராசில் நன்நடத்தையை விட கனமான எதுவும் இருக்காது." என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூதர்தா(ரழி)

ஆதாரம் : அஹ்மத், அபூதாவூத்

நன்மையும் தீமையும் நிறுக்கப்படும் போது நன்மைத் தட்டைத் தாழ்த்தும் பணியில் ஒழுக்கவியலின் பங்கு ஒப்பிட முடியாதது என்பதை இந்நபிமொழி உணர்த்துகின்றது.

"மனிதர்களை அதிகமாகச் சுவர்க்கத்தில் நுழைவிக்கக் கூடியது எது என நபி(ஸல்) அவர்களிடம் வினவப்பட்டபோது **இறையச்சமும் நன்நடத்தையுமே** என பதில் கூறினார்கள். நரகில் மனிதர்களை எது அதிகம் நுழைவிக்கும் எனக் கேட்கப்பட்ட போது **வாயும், பாலுறுப்பும்** என பதிலளித்தார்கள்" என அபூஹுரைரா(ரழி) அறிவிக்கிறார்கள்.

ஆதாரம் : அஹ்மத், திர்மிதி, இப்னு மாஜா, இப்னு ஹிப்பான்

சுவனம் கிடைப்பது மட்டுமல்ல சுவனத்தில் மிக உயர்ந்த இடம் கிடைப்பதாகவும் நபிமொழிகள் கூறுகின்றன.

"உரிமை இருந்தும் வீண் தர்க்கத்தை தவிர்ப்பவருக்கு சுவனத்தின் ஓரத்தில் ஒரு மாளிகைக்கு நான் பொறுப்பாவேன். விளையாட்டுக்குக் கூட பொய்யை விட்டவருக்கு சுவனத்தின் மத்தியில் ஒரு மாளிகைக்கு நான் பொறுப்பாவேன். யார் தன் நடத்தையைச் சீர் செய்து கொள்கிறார்களோ அவருக்கு சுவனத்தில் உயர்ந்த பகுதியில் ஒரு மாளிகைக்கு நான் பொறுப்பாவேன் என நபி(ஸல்) அவர்கள் நவின்றார்கள்.

அறிவிப்பவர் : அபூ உமாமதுல் பாஹிலி

ஆதாரம் : அபூதாவூத் (4800)

சுவனத்திலும் நபி(ஸல்) அவர்களுக்கு நெருக்கமான இடமளிக்கப்படுவதாகப் பின்வரும் நபிமொழி கூறுகின்றது.

"உங்களில் எனக்கு மிக நேசமானவரும், மறுமையில் இருப்பிடத்தால் எனக்கு மிக நெருக்கமானவரும் யாரெனில் யார் நன்நடத்தையுடையோரோ அவர்களே! .பெருமை பேசுபவனும், அர்த்தமில்லாது அதிகமாக மக்களிடம் கதைத்துக் கொண்டிருப்போரும் கபோடிகளுமே எனக்கு மிக வெறுப்பானவர்களும் மறுமையில் எனக்கு மிக தூரமானோருமாகும்." என்ற கருத்தை நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: ஜாபிர்(ரழி)

ஆதாரம் : திர்மிதி, அஹ்மத், ஹிப்பான்

நபி(ஸல்) அவர்களின் நேசத்தையும் நெருக்கத்தையும் பெற விரும்பும் முஸ்லிம் தன் நடத்தைகளைச் சீர் செய்து கொள்ள வேண்டும் எனக்

கூறி ஒழுக்கவியலின் பால் முஸ்லிம்களை இந்நபிமொழி இழுத்துச் செல்கின்றது.

இஸ்லாம் ஒழுக்கவியலை வெறும் பண்பாடாக மட்டுமன்றி இறை விசுவாசத்தின் அங்கமாகவும் கூறுகின்றது.

இறை விசுவாசிகளில் பூரணமானவர் நல்ல பண்பாடுடையோரே தன் மனைவியிடத்தில் கனிவுடன் நடப்போருமே, உங்களில் சிறந்தவர் என நபி(ஸல்) நவின்றுள்ளார்கள்.

அறிவிப்பு : அபூஹுரைரா(ரழி)

ஆதாரம் : திர்மிதி, அஹ்மத், ஹிப்பான்

எனவே பண்பாடு இன்றி இறைவிசுவாசம் பரிபூரணமடையாது என்பதைப் புரிய முடிகின்றது. எனவே ஒழுக்கக் கேடு இறைவிசுவாசத்தில் கூட ஓட்டையை ஏற்படுத்திவிடும் என்கிற அளவுக்கு இஸ்லாம் ஒழுக்கத்தை வழியுறுத்தியிருப்பதை அவதானிக்க முடிகின்றது.

ஒழுக்கவியலில் ஒருவன் தரம் தாழ்ந்து சொல்வது இறைவிசுவாசக் கோட்பாட்டில் கூடப் பாதிப்பை ஏற்படுத்திவிடும். மற்ற மதங்கள் ஒழுக்கவியலை வெறும் மனித தொடர்பாகக் கூற இஸ்லாம் அதனை இறைத் தொடர்பாக, தெய்வீக தொடர்பாக உயர்த்திக் காட்டியுள்ளது.

இவற்றை உணரும் ஒரு முஸ்லிம் தனது மறுமை வாழ்வின் சுபிட்சத்தையும் இம்மை வாழ்வின் மன நிம்மதியையுமடைய இஸ்லாம் கூறும் ஒழுக்க விதிகளை அறிந்து அதன்படி ஒழுகிடல் வேண்டும்.

எல்லாம் வல்ல அல்லாஹ் அதற்கு நம் அனைவருக்கும் அருள்புரிவானாக!